

## நூலாசிரியர் பற்றி ......

**'கவிஞானி'**

**டாக்டர் அ. மறைமலையான்**

இவர் தஞ்சாவூர் மாவட்டம் உரத்தநாடு வட்டம், கண்ணன்தன்குடியில் பிறந்தவர். தந்தை : க.து. அய்யாசாமி மண்கொண்டார், தாயார் : முத்தம்மாள், பிறந்த நாள் : 8-7-1932.

இவரது எழுதுகோல் பயணம் 1953 முதல் 45 ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. இதுவரை 50 நூல்கள் எழுதியுள்ளார்.

**இவர் பெற்ற பரிசுகள் :**

'ஒரு தமிழ்ப் பூ தவிக்கிறது' - *காவியம்* : தமிழக அரசின் முதற்பரிசு. 'பேரறிஞர் அண்ணாவின் பெருவாழ்வு' - *வாழ்க்கை வரலாறு* : தமிழக அரசின் இரண்டாம் பரிசு. 'காட்டு மல்லிகை' *நாடகம்* : அனைத்திந்திய வானொலி நாடகப் போட்டி, முதல் பரிசு. 'கலைமகள்' – 'ஆனந்த விகடன்' கதைப்போட்டிகளில் பரிசுகள். கவியரசர் கண்ணதாசனின் 'தென்றல்' *காவியம்* மற்றும் *வெண்பாப் போட்டிகளில்* பரிசுகள்.

**தமிழக அரசின் பாவேந்தர் விருது பெற்ற பாவலர்.**

'நிலவில் பூத்த நெருப்பு' அறிவியல் புதினம், 'அன்னை தெரேசா' வாழ்க்கை வரலாறு. 'ஒரு தமிழ்ப் பூ தவிக்கிறது' காவியம்-ஆகியன கல்லூரி, பள்ளி மாணவர்க்குப் பாட நூல்கள்.

**இதழ்த்துறைப் (பத்திரிகைத் துறை) பணிகள்:**

'போர் வாள்', 'போல்டு இந்தியா'- நாளிதழ்களின் ஆசிரியர். 'நவமணி' நாளிதழ் தலையங்க ஆசிரியர் ; 'மக்கள் பாதை மலர்கிறது'- மாத இதழ் ஆசிரியர். தற்பொழுது '**GUIDING LIGHT**' ஆங்கில மாத இதழின் ஆசிரியர்.

தாய்லாந்து தலைநகர் பாங்காக்கில் 1988-ல் நடைபெற்ற உலகக் கவிஞர் மாநாட்டில் தாம் ஆங்கிலத்தில் எழுதிய 'TREES ARE MY TEACHERS' என்னும் கவிதைக்குப் பாராட்டுப் பெற்றவர். ஆங்கிலம் -தமிழ் நூல்கள் மொழி பெயர்ப்பாளர்.

தந்தை பெரியார், 'தமிழ்க் கடல்' மறைமலையடிகள், பேரறிஞர் அண்ணா, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் வழிகளில் நடைபோடுபவர்.

'உலகத் தமிழ் எழுத்தாளர் பேரவை', 'மக்களாட்சிப் பாதுகாப்பு இயக்கம்' போன்ற அமைப்புகளின் தலைவர்.

மலேசியா, சிங்கப்பூர், தாய்லாந்து, ஈழம் (இலங்கை), ஆகிய நாடுகளுக்கு இலக்கியப் பயணம் மேற்கொண்டவர்.

அன்றில் பதிப்பகத்தார்.

---

அன்றில் பதிப்பகம்
25, சி.என்.கே. சாலை,
சேப்பாக்கம், சென்னை - 600 005.
தொலைபேசி : 8588466

# அண்ணா பார்வையில் ...
# தமிழக இலக்கியச் சிற்பிகள்



'கவிஞானி'

**டாக்டர். அ. மறைமலையான்**



# 5. இலக்கியப் பேரறிஞர் முனைவர் சி. இலக்குவனார்

தமிழகத்தில் கொழுந்துவிட்டு எரிந்தது 1965 மொழிப்போர். அப்போது மற்றத் தமிழ்ப் பேராசிரியர்கள் எவருமே தமிழுக்கு வரும் பெருங்கேடு பற்றிக் கவலையே படாமல் வேடிக்கை பார்த்த நிலையில் –

அறப்போர்க் களத்தில் நேரடியாகவே குதித்து, இந்தியப் பாதுகாப்புச் சட்டப்படி முதன் முதல் சிறைச்சாலைக்குச் சென்றார் ஒரே ஒரு தமிழ்ப் பேராசிரியர்!

அவர்தாம் தந்தை பெரியார் அவர்களுடைய பகுத்தறிவுப் பாதையில் நடைபோட்ட புரட்சித் தமிழறிஞர் முனைவர் சி. இலக்குவனார் ஆவார்.





## இளமையும் கல்வியும்

பழைய தஞ்சாவூர் மாவட்டம், திருத்துறைப் பூண்டி வட்டத்தைச் சேர்ந்த வாய்மேடு என்னும் சிற்றூரில் 1910 சூலை பதினைந்தாம் நாள் இலக்குவனார் பிறந்தார்.

இவருடைய தந்தையார்: சிங்காரவேலு தேவர், தாயார்: இரத்தினம் அம்மாள்.

பெற்றோர் இவருக்குச் சூட்டிய இயற்பெயர்: இலட்சுமணன்.

இராசாமடம் என்னும் ஊரில் நடுநிலைப் பள்ளி மாணவராகப் பயின்ற பொழுது, தமிழாசிரியராகப் பணியாற்றி னார் சாமி. சிதம்பரனார். 'தமிழர்தலைவர்' என்னும் தலைப்பில் தந்தை பெரியாரின் வாழ்க்கை வரலாற்றை எழுதிய பெருமைக்கு உரியவர் அவர். இவருடைய இலட்சுமணன் என்னும் வடமொழிப் பெயரை 'இலக்குவன்' என்று அவர் மாற்றினார்.

இவரது படிப்பு சுப்பையா ஆசிரியர் என்பவரிடம் திண்ணைப் பள்ளியில் தொடங்கிற்று. பின்னர் வாய்மேடு ஊரில் உள்ள அரசு தொடக்கப் பள்ளியில் நான்காம் வகுப்பு வரை பயின்றார்.

தஞ்சை மாவட்டத்தில் சரபோஜி மன்னர் அறக்கட்டளை சார்பில் இராசாமடம் ஊரில் உள்ள நடுநிலைப் பள்ளியில் ஐந்தாம் வகுப்பு மாணவராகச் சேர்ந்தார் இவர்.

மேலே குறிப்பிட்டுள்ள தமிழாசிரியர் சாமி. சிதம்பரனார் எடுத்துரைத்த தந்தை பெரியாரின் பகுத்தறிவுக் கொள்கைகள் இவரது பிஞ்சு நெஞ்சத்தில் அப்போது ஆழப் பதிந்தன.

எட்டாம் வகுப்பில் தேர்ச்சி அடைந்த பின்னர் அதே தஞ்சை மாவட்டம் உரத்தநாடு சிறுநகரில் சரபோஜி மன்னர் அறக்கட்டளையில் நடைபெறும் உயர்நிலைப் பள்ளியில் ஒன்பதாம் வகுப்பு மாணவராக இவர் சேர்ந்தார். அங்கே பொன்னண்ணா களத்தில் வென்றார் என்னும் பெயருடைய புலவரிடம் தமிழ் பயின்றார்.

பள்ளி இறுதி வகுப்புத் தேர்வில் (எஸ்.எஸ்.எல்.சி) வெற்றி பெற்றதும் திருவையாறு அரசர் கல்லூரியில் 'வித்துவான்' என்னும் புலவர் வகுப்பில் படித்தார்.

**அறிவுப் பசியால் அடைந்த பட்டங்கள்**

வித்துவான் பட்டத்துக்கு உரிய தேர்வில் கல்லூரியிலேயே முதல் மாணவராகத் தேர்ச்சி பெற்றார். அதனால் அதே தமிழ்க் கல்லூரியில் ஆசிரியர் பணியில் இவரால் அமர முடிந்தது.

அந்த வேலையில் இருந்தவாறே இளங்கலைஞர் (பி.ஏ.), கீழை மொழி இளங்கலைஞர் (பி.ஓ.எல்), முதுகலைஞர் (எம்.ஏ.) ஆகிய பட்டங்களை, தமது முனைப்பான கல்விப் பயிற்சியால் பெற்றார்.

அடுத்து 'தமிழ் மொழியின் தோற்றமும் வளர்ச்சியும்' என்னும் தலைப்பில் ஆய்வு செய்து 'எம்.ஓ.எல்' பட்டம் வென்றார்.





அறிவுப் பசி அடங்காத இலக்குவனார், தமது அய்ம்பதாம் அகவையில் தொல்காப்பியம் நூல் குறித்து ஆய்வு செய்து ஆங்கிலத்தில் கட்டுரை தீட்டி 'பி.எச்.டி' என்னும் 'டாக்டர்' (முனைவர்) பட்டம் பெற்றார்.

ஒருவர் கல்வியில் உயர்வதற்கு முதுமை ஒரு முட்டுக்கட்டை ஆகாது என்பதை மெய்ப்பித்துக் காட்டினார் இலக்குவனார்.

**ஆற்றிய ஆசிரியர் பணிகள்**

1936–ல் திருவாரூரில் உள்ள தஞ்சை மாவட்டக் கழக உயர்நிலைப் பள்ளியில் இலக்குவனார் தமிழாசிரியர் பணியை மேற்கொண்டார்.

தமிழ் நாட்டின் முதலமைச்சராக நான்கு முறை பதவி ஏற்றவரும், இன்று 'சமத்துவபுரம்' தோற்றுவித்து ஆட்சிபுரிபவருமான கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் இந்த இலக்கியப் பேரறிஞரிடம் மாணவராகத் தமிழ் பயின்றார்.

திருவாரூருக்குப் பின்னர் இவர் ஆசிரியர் பணியாற்றிய இடங்கள் வருமாறு:

1942–45: திருவையாறு அரசர் கல்லூரி.

1945–48: திருநெல்வேலி இந்து கல்லூரி.

1948–52: விருதுநகர் செந்தில் குமார நாடார் கல்லூரி.

1956: ஈரோடு மகாசனக் கல்லூரி

1958: நாகர் கோவில் இந்து கல்லூரித் தமிழ்த் துறை தலைவர்.

1961–67: மதுரைத் தியாகராயர் கல்லூரித் தமிழ்த்துறை தலைவர்.

31–12–1970: நாகர்கோவில் இந்து கல்லூரி முதல்வர் பணியிலிருந்து ஓய்வு.

அதன் பின்னர் தமிழ்ப் பணியிலும் பொதுத் தொண்டிலும் முழுமையாக ஈடுபட்டிருந்தார் இவர்.

**புதுக்கோட்டை திருக்குறள் கழகம்**

விருதுநகர் செந்தில் குமர நாடார் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றிய போது இலக்குவனாருக்குச் சோதனை ஏற்பட்டது.

தந்தை பெரியார் – பேரறிஞர் அண்ணா ஆகியோருடைய வழிகளில் பகுத்தறிவுக் கொள்கையாளராகத் திகழ்ந்த இவர் மீது மாற்றுக் கருத்துடையோர் வீண் புகார் கிளப்பினர். அதனால் வேலையிலிருந்து நேர்மையற்ற முறையில் இவர் நீக்கப்பட்டார்.

அந்நிலையில் புதுக்கோட்டை வந்தடைந்த இவரை, அறப்பணியாளராகத் திகழ்ந்த அண்ணல் பி.ஏ. சுப்பிரமணியனார் வரவேற்றுத் தமிழ்ப் பணி ஆற்றுவதற்கு வாய்ப்புகளை உருவாக்கினார்.





இவருக்காகவே 'திருக்குறள் கழகம்' என்னும் இலக்கிய அமைப்பினைத் தோற்றுவித்தார் அவர். ஞாயிறு தோறும் இவர் திருக்குறள் வகுப்புகள் நடத்தவும் ஏற்பாடு செய்தார்.

புதுக்கோட்டையில் தங்கியிலிருந்த போது தான், விருதுநகர் கல்லூரியிலிருந்து வேலை நீக்கம் செய்யப்பட்ட கொடுமையை விளக்கி 'துரத்தப்பட்டேன்' என்னும் கவிதை நூலை எழுதினார் இலக்குவனார்.

அப்போது இவரிடம் திருக்குறள் பாடம் கேட்டு நெருங்கிப் பழகும் வாய்ப்பு இந்த நூலாசிரியனாகிய மறைமலையானுக்குக் கிட்டியது.

**இனிய நறுந்தமிழில் இலக்கிய நூல்கள்:**

தமிழ் வளர்ச்சிக்காக தமது எழுத்தாற்றலால் மிகச் சிறந்த இலக்கியக் கருவூலங்கள் பலவற்றை இவர் இயற்றியுள்ளன.

அவற்றில் குறிப்பிடத் தக்கன வருமாறு:

எழிலரசி, மாணவர் ஆற்றுப்படை, துரத்தப்பட்டேன், அண்ணாவிற்குப் பாவியல் வாழ்த்து, வள்ளுவர் வகுத்த அரசியல், வள்ளுவர் கண்ட இல்லறம், தொல்காப்பிய ஆராய்ச்சி, பழந்தமிழ், தமிழ் கற்பிக்கும் முறை, இலக்கியம் கூறும் தமிழ் வாழ்வியல், கரும வீரர் காமராசர், என் வாழ்க்கைப் போர், திருக்குறள் எளிய பொழிப்புரை, தொல்காப்பிய விளக்கம்.

தமிழ்ப் பேராசிரியர்கள் எல்லாருமே சமற்கிருதம், ஆங்கிலம் முதலான அயல் மொழிச் சொற்களின் கலப்படப் பிணியை அறவே அகற்றி எழுதுவர் என உறுதியாகக் கூற இயலாது.

ஆனால் முனைவர் இலக்குவனார் அவர்களோ, 'தனித்தமிழ் இயக்கத் தந்தை' மறைமலை அடிகளாரின் அடியொற்றித் தூய தமிழ் வளர்க்கும் அழுத்தமான அக்கறையோடுதான் இனிய நறுந்தமிழில் இலக்கிய நூல்களைத் தீட்டியுள்ளார்.

தமிழில் புலமை மிகுந்த இவர், ஆங்கில மொழியிலும் சிறப்பாகத் தேர்ச்சி பெற்றவர் ஆவார். அதனால் தான் ஆங்கில மொழியிலும் அய்ந்து நூல்களை இவர் எழுதி வெளியிட்டுள்ளார்.

**இதழ்கள் வெளியீட்டில் ஈடுபாடு:**

தன்னல வெறி இன்றிப் பொது நல ஆர்வத்துடன் மக்களிடம் விழிப்புணர்ச்சியை வெளியீட்டில் ஈடுபடுதல் இயற்கை.

எழுச்சிதரும் கருத்துகளை எல்லாத் தரப்பு மக்களுக்கும் எளிதாகவும் விரைவாகவும் எட்ட விடுவதற்கு வலிமை மிக்க படைக்கலன் போல் பயன் தருவது பத்திரிகை என்னம் இதழே.

அவ்வாறு இதழ் வெளியீட்டின் வாயிலாகவும் நாட்டில் 'கருத்துபூ பரப்பல்' (பிரச்சாரம்) பணியை மேற்கொள்ளவும் நாட்டம் கொண்டார் இலக்குவனார்.





எனவே 'சங்க இலக்கியம்', 'இலக்கியம்', 'திராவிடக் கூட்டரசு', 'குறள் நெறி' என்னும் தலைப்புகளில் வெவ்வேறு காலங்களில் இதழ்களை வெளியிட்டார் இவர்.

இதழ் வெளியீடு என்பது நிறையப் பொருள் இழப்புக்கும் கதவைத் திறந்துவிடக் கூடிய கடனமான பணியாகும். ஆயினும் அந்தத் துறையில் தொண்டு வேட்கையில் உந்துதலால் துணிந்து இறங்கினார் இலக்குவனார்.

தமிழைக் கற்பிக்கும் பேராசிரியர்களில் இவரைப் போன்று இனத்தொண்டு, மொழித் தொண்டு ஆகியவற்றை ஆற்றிக் கொண்டே இதழ்களின் வெளியீட்டிலும் தம்மை ஒப்படைத்துக் கொண்ட இலக்கியப் பேரறிஞர் வேறு எவரும் இலர்.

அண்ணாவை அறப்போர் நடத்தத் தூண்டியவர்:

தந்தை பெரியார் அவர்களுடைய கொள்கைத் தறபதியாக விளங் கிய பேரறிஞர் அண்ணா அவர்களிடம் பெரு மதிப்புக் கொண்டவர் இலக்குவனார்.

தாம் மதுரைத் தியாகராயர் கல்லூரியில் தமிழ்த் துறைத் தலைவராக இருந்தபோது, அங்கே அண்ணாவின் சிறப்புச் சொற்பொழிவு நடைபெற இவர் ஏற்பாடு செய்தார்.

**1963** சனவரித் திங்கள் ஏழாம் நாள் அன்று 'தத்துவர் போர்' எனனு ம் தலைப்பில் அண்ணா உரை நிகழ்த்தினார்.

அவருக்கு முன்னால் பேசிய இலக்குவனார் –

"விலைவாசிப் போராட்டம் தேவையான ஒன்றுதான். அதைவிட முக்கியமாக இந்தி ஆட்சி மொழி அவதைத் தடுக்க வேண்டும்; அதற்குரிய போராட்டங்களைத் தொடங்க வேண்டும்' என்று கேட்டுக்கொண்டார்.

இவருக்கு விடையளிக்கும் வகையில் தமது சொற்பொழிவில் அண்ண ா இவ்வாறு குறிப்பிட்டார்.

" இந்தி ஆட்சி மொழி ஆவதைத் தடுக்க உடனே போராட்டம் தேவை என்றார் இலக்குவனார். இது நல்ல கருத்து; வரவேற்கத் தக்கது; கழகப் பொதுக்குழுவைக் கூட்டிப் போராட்டத் திட்டத்தை வகுப்பேன்"

தாம் அறிவித்தவாறே இந்தி எதிப்புப் போராட்டத்தை 1963 – லே யே முடுக்கிவிட்டார் அண்ணா. பின்னால் 1965–ல் தமிழ் நாடே கொந்தளிப்பின் உச்சக் கட்டத்தை அடைந்ததற்கு இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே தூண்டுகோலாய்த் திகழ்ந்தவர் இலக்குவனார் என்றும் சொல்லலாம்.

இந்த நிகழ்ச்சியிலிருந்து இருபெரும் மொழிமானத் தலைவர்களுக்கும் இடையே வளர்ந்திருந்த உள்ளப் பிணைப்பைப் புரிந்து கொள்ளலாம்.

### இருமுறை சிறைசென்ற ஒரே தமிழறிஞர்

மேலே குறிப்பிட்டதைப் போன்று 1965 –ல் இந்தி எதிர்ப்புப் போர் எரிமலையாக வெடித்தது.

அந்த ஆண்டு சனவரித் திங்கள் 26 ஆம் நாளாகிய குடியரசு நாளைத் 'துக்க நாள்' ஆக்க் கொண்டாடுவது





என்று திராவிட முன்னேற்றக் கழகப் பொதுச் செயலாளர் அறிவித்தார். ஆனால் ஒரு நாள் முன்னதாகவே சனவரி 25 ஆம் நாளே தமிழ்நாடு மாணவர் இந்தி எதிர்ப்பு இயக்கம் போராட்டத்தைத் தொடங்கிவிட்டது.

அவ்வாறு போராட்டம் வெடிப்பதற்கு மாணவர்களைத் தூண்டிவிட்டவர் பேராசிரியர் இலக்குவனாரே என்று தமிழக அரசு பழி போட்டது. அமைச்சர்களைக் கொல்லச் சதி செய்தார் என்றும் கொடிய குற்றச் சாட்டுகளைச் சுமத்தியது. அவற்றைக் காரணம் காட்டி 1965 பிப்ரவரி முதல் நாள் காவல் துறை இவரைக் கைது செய்து சிறையில் வைத்தது.

அத்துடன் இவரது சிறை வாழ்வு தேங்கி நிற்கவில்லை.

தமிழ்மொழி வழியாகத் தான் எல்லாப் பாடங்களையும் கற்பிக்க வேண்டும் என்னும் கோரிக்கையை வலியுறுத்திக் குமரி முனையிலிருந்து சென்னை வரை '1965 மே அய்ந்தாம் நாள் அந்தப் பயணம் புறப்படும் என்று அறிவித்தார்.

ஆனால் 1த965 மே முதல் நாளே இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் இவை கைது செய்யப்பட்டார். அந்தக் கொடிய அடக்குமுறைச் சட்டக் கொடு வாளால் சிறைக்கோட்டம் அனுப்பப்பட்ட ஒரே தமிழ்ப் பேராசிரியர் – தமிழ்நாட்டுப் பேராசிரியர் தமிழ் இனப் பேராசிரியர் இலக்குவனார் ஒருவரே!

இவ்வாறு திராவிட இயக்கக் கொள்கைகளுக்காகத் தியாகத் தழும்புகளை ஏற்ற இலக்கியப் பேரறிஞர் முனைவர் இலக்குவனார் 1973 செப்டம்பர் மூன்றாம் நாள் இயற்கை எய்தினார்.

இவரது மறைவு தமிழ் மொழி மானம் கொண்ட உலகத்தமிழர் அனைவரையுமே துயரக் கண்ணீர் வடிக்கச் செய்தது.

இத்தகைய கொள்கைச் செம்மல் இலக்குவனார் மீது பேரறிஞர் அண்ணா எத்துணை உள்ளார்ந்த பற்று வைத்திருந்தார் தெரியுமா?

இதோ அவரது உள்ளப் படப்பிடிப்பு!

இந்தி எதிர்ப்பு மாணவர் மாநாடு இங்கு (கொடைக் கானலில்) நடைபெறுகிறது. இதற்கு ஏராளமாகப் பொதுமக்களும் குறிப்பாக, தாய்மார்களும் – வந்திருக் கிறார்கள். மாணவர்களின் மனநிலை எப்படி இருக்கிறது என்று அறியத்தான் அவர்கள் இங்கு வருகை தந்திருக் கிறார்கள்.

இந்த மாநாட்டில் மாணவர்கள் கூடிப் பல்வேறு பிரச்சினைகள் பற்றி ஆராய்ந்து பல தீர்மானங்களைப் போட்டிருக்கிறார்கள்.

நானும் மாணவனாக இருந்தவன்; அவர்களும் என் நிலைக்கு உயர வேண்டியவர்கள். மாணவர்கள் என்ன நினைப்பார்கள் என்பதை என்னால் உணர முடியும். ஆனால் என்னைப் போன்று (முதலமைச்சர்) பொறுப்பில் இருப்பவர்கள்





என்ன நினைப்பார்கள் என்பதை மாணவர்கள் உணர, இன்னும் பத்து ஆண்டுகள் ஆக வேண்டும்.

மாணவர்கள் தெரிவித்த உணர்ச்சியை நான் பெரிதும் மதிக்கிறேன். அந்த உணர்ச்சி – உலைக் களத்தில் பழுக்கக் காய்ச்சிய இரும்புக்குச் சமம்.

**பழுக்கக் காய்ச்சிய இரும்பு**

இரும்பைப் பழுக்கக் காய்ச்சினால் தான் வாளாகவும் வேலாகவும் வடிக்க முடியும். இன்றைய தினம் மாணவர்கள் தீட்டிஞுள்ள தீர்மானங்களில் பொறி பறக்கின்ற – பழுக்கக் காய்ச்சிய இரும்பைப் பார்க்கிறேன்.

உலைக் களத்தைக் கூர்ந்து கவனித்தால், பழுக்கக் காய்ச்சிய இரும்பை அடித்து, வாளாக – வேலாக – மாற்றிய பிறகு தண்ணீரில் போட்டுக் குளிர வைப்பார்கள். அதன் பிறகுதான் அதைக் கையில் எடுக்க முடியும்.

மாணவர்களின் தீர்மானங்கள் – பழுக்கக் காய்ச்சிய இரும்பாக இருக்கின்றன. அவற்றைப் பொது மக்கள் வாளாக – வேலாக வடித்துத் தருகிறார்கள். என் வேலை – அவற்றைத் தண்ணீரில் போட்டுக் குளிர வைப்பதுதான்!

மாணவர்களின் உணர்ச்சியை நான் மதிக்கிறேன்.

அதே நேரத்தில் அதைக் குளிர வைக்கிறேன்.

அப்போதுதான் அறுவடை செய்யும் அரிவாள் கிடைக்கும்; மரத்தைப் பிளக்கும் கோடெறி கிடைக்கும்; வண்டிக்கு உதவும் கருவிகள்–கடையாணி, அச்சு போன்றவை கிடைக்கும்!

## இலக்குவனாரால் கல்லூரிக்குப் பெருமை

இந்த மாநாட்டில் நிறைவேற்றப்பட்ட இன்னொரு தீர்மானம் – இந்தி எதிர்ப்பு இயக்கத்தின்போது வேலையிழந்த பேராசிரியர் இலக்குவனாருக்கு நல்ல வேலை தர வேண்டும் என்பது.

இலக்குவனார் அவர்கள் புகழ் பெற்ற பெரும் பேராசிரியர் ஆவார். அவர் எந்தக் கல்லூரியில் பணியாற்றினாலும் அந்தக் கல்லூரிக்குத்தான் பெருமை.

தொல்காப்பியத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து அதன் பெருமையை உலகம் அறிந்து கொள்ளச் செய்தவர்.

இந்தி எதிர்ப்பு இயக்கம் நடைபெற்றபோது, அதில் அவர் தீவிரமாக ஈடுபட்டதால், அவர் வேலை இழந்தார்.

அவருக்கு நல்லதொரு வேலையாகப் போட்டுதர வேண்டும் என்று தீர்மானம் போட்டிருப்பதில் எனக்கு ஒரு புறத்தில் வருத்தம் இருக்கவே செய்கிறது.

இதைக் கூடவா நாங்கள் செய்ய மாட்டோம்? இதைக் கூடவா நீங்கள் சொல்லித்தான் நாங்கள் செய்வோம் என்று நினைக்கிறீர்கள்?

உண்மையைச் சொல்லப்போனால் – இலக்குவனாருக்கு நல்ல வேலை தருவது என்று நாங்கள் தீர்மானித்து இரண்டு மாதங்கள் ஆகின்றன.

இருந்தபோதிலும் நீங்கள் இப்படித் தீர்மானம் போடுவது உங்கள் திறமையைக் காட்டலாம்; 'நாங்கள் கொடைக் கானலில் தீர்மானம் போட்டோம்; இலக்குவனாருக்கு நல்ல வேலை கிடைத்தது' என்று மாணவர்கள் பாத்தியதை (தனி உரிமை) கொண்டாடலாம்.





என்ன இருந்தாலும் நான் உங்கள் அண்ணன் அல்லவா? நானும் எனது பாத்தியதையை விடுவதாக இல்லை! அதனால்தான் பேராசிடரியர் இலக்குவனாருக்கு நல்ல வேலை தருவது பற்றி நாங்கள் முன்பே தீர்மானித்து விட்டோம்.

## பெருமை மிக்க தியாகங்கள்

1938ஆம் ஆண்டிலிருந்து இந்தி எதிர்ப்பு இயக்கம் – சுயமரியாதை இயக்கம் – தமிழ்ப் பாதுகாப்புக் கழகம் – என்று பல பெயர்களில் இயங்கி வந்தாலும், பொதுவாகத் தமிழர்கள் தொடர்ந்து இந்தியை எதிர்த்து வருகிறார்கள் என்பதை உலகம் உணரச் செய்திருக்கிறோம்.

முதன் முதல் நடைபெற்ற அந்த இந்தி எதிர்ப்புப் போரில் 'முதல் சர்வாதிகாரி' என்று பெரியார் அவர்களால் அறிவிக்கப்பட்டு, இராச கோபாலாச்சாரியார் (முதல்வராக இருந்த) காலத்தில் சிறை சென்றேன்.

இப்போது (1967–ல்) நடைபெற்ற தேர்தலில் கழகம் பெரு வெற்றியடைந்து இராசகோபாலாச்சாரியாரைச் சந்தித்த போது இதைத்தான் குறிப்பிட்டேன்.

"நீங்கள்தான் முதன் முதலில் என்னைச் சிறைக்கு அனுப்பினீர்கள். இப்போது நீங்கள் தான் எங்களைப் பதவிக்கு அனுப்பியிருக்கிறீர்கள்."

–என்று அவரிடம் வேடிக்கையாகக் கூறினேன்.

இந்தி எதிர்ப்பு இயக்கம் வலுப்பெறுவதற்காக இலக்குவனார் ஏற்றுக்கொண்ட இழப்புகளை – ஆற்றிய அரும்பணிகளை – மறக்க முடியாது.

அந்த இந்தி எதிர்ப்புப் போராட்டங்களிலேயே – எண்ணி எண்ணிப் பெருமைப்படத் தக்க தியாகங்களை மாணவர்கள் புரிந்ததை 1965–ல் கண்டோம். அப்போது மாணவர் சமுதாயம் தனக்கு ஏற்பட்ட இன்னல்களை – துயரங்களை – இழப்புகளைப் பொருட்படுத்தாது போராடியதற்காக எனது மரியதை கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*கொடைக்கானலில் 3–6–1967 நடைபெற்ற இந்தி*
*எதிர்ப்பு மாணவர் மாநாட்டில் தமிழக முதல்வர்*
*பேரறிஞர் அண்ணா ஆற்றிய உரை.*
*'நம் நாடு' நாளிதழ்: 4–6–1967.*